egistered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 30—No 12

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி மார்கழி 1957 டிசம்பர் | இதழ் 1

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.எ., பி.எல்.
உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

# சமாஜ அறிக்கைகள்

---

1. மலாய் நாட்டிலும் இலங்கையிலும் உள்ள சமாஜ உறுப்பினர்கள், தயைகூர்ந்து அடுத்த ஆண்டு (1958) சந்தாவை திரு. மா. ப. தியகராஜ முதலியார், B. A., 28, இராமகிருஷ்ண மட் ரோட்டு, சென்னை-4 என்ற முகவரிக்கு மணி ஆர்டர் மூலம் அல்லது British Postal Order மூலம் கூடிய சீக்கிரம் அனுப்பும்படி கேட்டுக்கொள்ளப் படுகிறது. ஒவ்வொருவரும் தனித்தனியே அனுப்புவதை விட உறுப்பினர் பலர்கூடி மொத்தத் தொகையை, மேற்கூறியபடி அனுப்பவும். மலாய் நாட்டு உறுப்பினர்கள் சந்தாவைத் திருவாளர் கா. இராமநாதஞ் செட்டியார், B.A., B.L. அவர்களும், திருவாளர் சிவநேயனும் அனுப்பியதைச் சமாஜம் நன்றியுடன் பாராட்டுகிறது. 1958-ம் ஆண்டுச் சந்தாவையும் அம்மாதிரியே எதிர்பார்க்கின்றோம். சமாஜம் வி. பி. மூலம் சந்தா வசூலிப்பதென்றால் P. P. Form வாங்குவது முதலியவற்றால் காலதாமதம், அதிகச் செலவு முதலியன ஏற்படுகின்றன.

2. இந்தியாவிலுள்ள சமாஜ உறுப்பினர்கள், 1958 வது வருட சந்தாவை இம்மாதமே அனுப்பிவிடுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறது. அப்படி அனுப்புவதால் V. P. செலவு மிச்சப்படுவதோடு, காலதாமமின்றி ஜனவரி மாதம் 11-ஆம் புதுமலர் 52-வது ஆண்டு விழாப் பேருரைகளை வாசிக்கலாம். மணியார்டர் மூலம் சந்தா அனுப்புவோர் கூப்பனில் சந்தா எண் முகவரியையும் தெளிவாகக் குறிக்க வேண்டுகிறோம்.

3. 31—12—57க்குள் 1958-ம் ஆண்டுச் சந்தாவை அனுப்பத் தவறும் அங்கத்தினர்களுக்கு ஜனவரி மாத மலர் 31-இதழ் 1, 10—1—58ல் வி.பி. மூலம் அனுப்பப்படும். அதைப்பெற்றுச் சமாஜத்தைக் கௌரவிக்க வேண்டுகிறோம்.

4. சைவ சித்தாந்த மகாசமாஜப் பொன்விழா மலரின் விலை ரூ. 1/-லிருந்து இவ்வாண்டு நிறைவு விழாவை முன்னிட்டு 75 N. P. (நையே பைசேக்கு) குறைக்கப் பட்டுள்ளது. மகாநாட்டுப் பந்தரில் வாங்குபவர்களுக்கு இந்த வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சைவ சித்தாந்த மகா சமாஜம்

# 52-வது ஆண்டு நிறைவு விழா

## திருமயிலாப்பூர்

---

செவிகாள் கேண்மின்களோ
சிவன் எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பிரான்திறம் எப்போதும்
செவிகாள் கேண்மின்களோ !

**பேரன்புடையீர் !**

நிகழும் ஏவிளம்பி ஆண்டு மார்கழித் திங்கள் 12-ம் நாள் (27–12–1957) வெள்ளிக்கிழமை தொடங்கி, 3 நாட்கள் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் **52-வது ஆண்டு நிறைவு விழாவும்**, அதன் அங்கமாகச் **சைவர், சைவ மங்கையர், சைவ இளைஞர் மாநாடுகளும்**, சென்னைத் திருமயிலாப்பூர், தெற்கு மாடவீதியின் மேற்குக் கோடியில் உள்ள **"ஸாய் கான சபா"** மண்டபத்தில் அடுத்துக் காணும் நிகழ்ச்சி முறைப்படி நடைபெறும்.

சைவர் மாநாட்டைத் திறந்துவைக்கச் சென்னை அற நிலையப் பாதுகாப்பு மந்திரி - உயர்திரு. **பக்தவத்சலம்** அவர்களும், மங்கையர் மாநாட்டைத் திறக்கத் திருமதி. **சரோஜினி வரதப்பன் அம்மையார்** அவர்களும், இளைஞர்

மாநாட்டைத் திறக்க உயர்திரு. மணலி - இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ. அவர்களும் இசைந்துள்ளார்கள்.

ஆண்டு விழாவிற்கும், சைவர் மாநாட்டிற்கும் உயர்திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி.ஏ., பி.எல். அவர்கள் தலைமை வகிப்பார்கள். திருமதி. ஜோதி வெங்கடாசலம் அம்மையார், எம்.எல்.சி. அவர்கள் மங்கையர் மாநாட்டிற்கும், உயர்திரு. ச. சிவகுமாரனார், எம்.ஏ. அவர்கள் இளைஞர் மாநாட்டிற்கும் தலைமை வகிப்பார்கள்.

தாங்கள் தங்கள் சபையினரோடும், ஏனைய நண்பர்களோடும் மூன்று நாட்களும் வந்திருந்து உடன் உறைவின் பயனைக் கொண்டும், கொடுத்தும் சிறப்பிக்க வேண்டுகிறோம்.

இங்ஙனம் :

| | |
|---|---|
| அ. சோமசுந்தரம் செட்டியார், எம்.ஏ., | மா. ப. தியாகராஜ முதலியார், பி.ஏ., |
| சமாஜத் தலைவர் | சமாஜப் பொதுக் காரியதரிசி |

வரவேற்புக் கழகத்தினர் :

| | |
|---|---|
| அ. சோமசுந்தரம் செட்டியார், எம்.ஏ. | ம. சி. சம்பந்த முதலியார் |
| டி. மாணிக்கம் செட்டியார் | கமலக்கண்ண முதலியார், M.C. |
| நடராஜ முதலியார் | W. T. மாசிலாமணி முதலியார் |
| சிம்புமல் சௌக்கார் | அய்யா சுப்பிரமணிய முதலியார் |
| P. குப்புசாமி முதலியார் | |

---

# நிகழ்ச்சி முறை

## ஏவிளம்பி மார்கழி 12உ வெள்ளிக்கிழமை (27-12-'57)

காலை 7—9 கபாலீச்சரத்தில் கோயில் வழிபாடும், சிங்காரவேலர் சந்நிதியில் முருகன் மும்நூல் வெளியீடும், தலைவர்களை ஊர்வலமாக அழைத்து வருதலும்.

,, 9-12 திறப்புப் பேருரைகளும், தலைமைப் பேருரைகளும்.

மாலை 4—8 **சைவர் மாநாடு :** தேவார பாராயணம்.

சொற்பொழிவுகள் :

திரு. R. சண்முகசுந்தரம் செட்டியார் அவர்கள்
**—அங்கும் இங்கும்**

திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள் **—சைவமும் தற்கால நிலையும்**

தலைவர் கருத்துரை, கடவுள் வாழ்த்து.

## மார்கழி 13உ சனிக்கிழமை (28-12-'57)

காலை 7—8 வெள்ளீச்சரத்தில் கோயில் வழிபாடு.

,, 8-11 **மங்கையர் மாநாடு :** சொற்பொழிவுகள் :

திருமதி. புனிதவதி இளங்கோவன் அவர்கள்
**—பெண்மணித் தொண்டர்கள்**

திருமதி. சரஸ்வதி பாண்டுரங்கன் அவர்கள்
**—தெய்விக வாழ்க்கை**

மாலை 4—8 **சைவர் மாநாடு :** தேவார பாராயணம், தலைவர் முன்னுரை, சொற்பொழிவுகள் :

திரு. புலவர் முருகவேள் எம்.ஓ.எல். அவர்கள்
**—அகப்பொருளில் அருட்பொருள்**

திரு. ஜி. வடிவேலாயுதம் எம்.ஏ. அவர்கள்
**—நாவுக்கரசும் பாவின் நயமும்**

தலைவர் கருத்துரை, கடவுள் வாழ்த்து.

**மார்கழி 14உ ஞாயிற்றுக்கிழமை (29-12-'57)**

காலை 7—9 சமாஜ உறுப்பினர் பொதுக்கூட்டம், பணியாளர்கள் தேர்தல், தீர்மானங்கள்.

" 9-12 **சைவ இளைஞர் மாநாடு :** பல இளைஞர்களின் சொற்பொழிவுகள், கருத்துரை, கடவுள் வாழ்த்து.

மாலை 4—8 **சைவர் மாநாடு :** தேவார பாராயணம், தலைவர் முன்னுரை, சொற்பொழிவுகள் :

சித்தாந்தப் பிரசங்காமிர்தம் - திரு. பூ. சமரபுரி முதலியார் அவர்கள் —**கணேசர் இறைவரா ?**

சித்தாந்த ரத்நாகரம் - திரு. க. வச்சிரவேல் முதலியார் பி.ஏ. எல்.டி. அவர்கள்
—**உண்மை விளக்கம்**

நன்றி கூறல், தலைவர் முடிவுரை, கடவுள் வாழ்த்து.

**வாழ்க சீரடியாரெல்லாம்.**

---

**குறிப்பு :**—அவைக்களத்தில் பெண்மணிகளுக்குத் தனி இடம் உண்டு. தங்கும் இடம், உணவு வசதிகள் வேண்டும் சமாஜ வெளியூர் அங்கத்தினர்கள் 20-12-57க்குள் சமாஜப் பொதுக் காரியதரிசிக்குத் தெரிவிக்க வேண்டும். சந்தா, நன்கொடை முதலியன சமாஜ சபா மண்டபத்தில் செலுத்தலாம். இந்த ஆண்டு விழாவின் செலவிற்காகச் சமாஜ அங்கத்தினர் அனைவரும் இயன்ற அளவு பொருளுதவி புரியுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம். ரசீதும் பெற்றுக்கொள்ள விரும்புகிறோம். ஆண்டு விழாவின் போது சமாஜப் பொன் விழா மலர் முக்கால் ருபா விலைக்குக் கிடைக்கும்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி மார்கழி 1957 டிசம்பர் | இதழ் 12

## ஆசிரியனிடத் தன்பு

(ஆசிரியர்)

பெரியோர்களிடம் அன்பு: பெரியோர்களிடம் அன்பு செலுத்தவேண்டும் என்பது நமது நாட்டுக் கோட்பாடு. அப்பெரியோர்களை ஐந்து வகையில் பிரித்துக் கூறியிருக்கிறார்கள். அவர்கள் முறையே தாய், தந்தை, ஆசான், மூத்தோன், தெய்வம் என்பார். இவர்கள் ஒவ்வொருவரிடமும் எங்கெந்த வகையில் அன்பு செலுத்தவேண்டும் என்பதற்கு முறைகளும் அம்முறைகளைப் பற்றிய சிறு எடுத்துக் காட்டுக் கதைகளும் இருக்கின்றன. இக்கொள்கைகளுக்கு எதிரிடையாக நடந்துகொண்டால் அதனால் ஏற்படும் தீமைகளும் அவைகளுக்கு ஏற்ற எடுத்துக் காட்டுக்களும் உண்டு. இவ் விபரங்கள் பாரதநாடு முழுவதும் வழங்குகின்றன. ஒவ்வொரு மொழியிலும் உண்டு. சிறப்பாக வடமொழியில் உண்டு. அவைகளில் பல வேறுபாடுகளும் தோன்றியிருக்கின்றன.

வடநாட்டுக் கொள்கை: பெரியோர்களைப் பற்றிய தமிழ்ச் சொற்களைக் கூறினோம். அவற்றிற்குரிய வடமொழிகளாவன: மாதா, பிதா, குரு, தெய்வம் என்பன. இக் கொள்கைகளை விளக்கமாக வடமொழியில் தர்மசாஸ்திரங்கள் மொழிகின்றன. வடநாட்டுக் கொள்கையின்படி அப் பெரியோர்களைத் தேவர்களாக மதிக்கவேண்டும். "மாத்ரு

தேவோப் பிரியர் ” முதலிய தொடக்க மொழிகள் இதனை வற்புறுத்துகின்றன. தாய், தந்தை, ஆசான் முதலியவர் களைத் தேவர்களாகப் பாவித்து வணங்குவது வடநாட்டுக் கொள்கை, அதுவே தமிழ்நாட்டிலும் புகுந்து பரவி விட்டது. இதனை வற்புறுத்தும் புராணக் கதைகள் அளவிற்கு மிஞ்சி யிருக்கின்றன. அவைகளின் போக்கும் மிக விபரீதமாகவே இருக்கும். தமிழில் அவ்வாறு எல்லை கடந்ததாக இல்லை.

**ஆசானிடத்தில் அன்பு (வடநாடு) :** தாய் தந்தை யரைப்பற்றிப் புதல்வர்கள் மிதம் மீறிய அன்பு கொள்ளவேண் டியது இயற்கைதான். ஆனால் கல்வி கற்பிக்கும் ஆசானிடம் அத்தனை அன்பு செலுத்தவேண்டியதில்லை. என்றாலும் வட நாட்டில் ஆசாரியனிடம் அபரிமிதமான பக்தி செலுத்த வேண்டியது என்று வடமொழி நூல்கள் கூறும். எந்தத்துரோ கத்தையும் மன்னிக்கலாம் ; குருத்துரோகம் மன்னிக்கவே முடியாது என்று புராணங்கள் கூறும். இராமாயணத்தில் வசிட்டரிடம் தயரதன் கொண்ட பக்திக்கும், பாரதத்தில் துரோணனிடம் பாண்டவர்களும் கௌரவர்களும் கொண்ட பக்திக்கும் அளவில்லை. மிகவும் மிதம் மீறியுள்ளது ஏகலைவன் கதை !! நேரில் வில்வித்தை கற்றுக்கொடாதிருந்து மறுத்தும் மானசிகமாகக் குருவாகக் கொண்ட செய்திக்கு வித்தைக்கு உயிராகும் பெருவிரலை அறுத்துக் கொடுக்கும்படி கேட்டு வாங்கின துரோணனுக்குக் கொடிய குருத்துவம் எத்தகையது என்று கூறவும் வேண்டுமா ?

**தென்னாட்டுப் பழக்கம் :** தமிழ் நாட்டில் இத்தனை கொடுமை ஆசான் கொண்டிருந்ததாகக் காணோம். சங்க காலத்தில் புலவர்கள் இந்தக் கொடிய கொள்கைகொண் டிருக்கவில்லை. வடமொழிப் புராணங்கள் தெற்கே வந்து நுழைந்த பிறகுதான் இக்கொடுமையும் நுழைந்தது. சங்க காலத்தில் புலவர்களை அரசர்களும் நண்பர்களாகவே கொண் டிருந்தார்கள். வடக்கிருத்தல் முதலிய கொடிய வழக்கத்தைப் பிசிராந்தையார் கொண்டிருந்ததும் நட்பின் செயலேயன்றிக் குருபக்தியினால் அன்று. குருபக்தி யல்லது ஆசிரியன் அன்பு சேர, சோழ, பாண்டியர் பேரரசின் பிறகே தோன்றியது.

இராசேந்திர சோழன் தன் குருவான சம்புசிவாச்சாரியருக்கு மதிப்பில் கடந்த நிலக்கொடை செய்தது வடமொழி புகுத்தின செய்தியே யாகும்.

**தமிழ்ச்சொல் குறை ;** "எழுத்தறிவித்தவனே இறைவனுகக் கொள்ளும் எண்ணம் பிற்காலத்து அதிவீரராம பாண்டியன் சொன்ன வடமொழி இறக்குமதியாகும். குரு, ஆசாரியன் என்ற சொற்களுக்குத் தனியான தமிழ்ச்சொற்களும் கிடைக்கவில்லை போலும். எழுத்தறிவித்தவன் என்ற மொழி பெயர்ப்பு இரட்டைச் சொல் ஏன் வேண்டுமோ? ஆகவே குருவைத் தேவனுகப் பாவிக்கும் கொள்கை தமிழுக்கும் புறம்பானதோ என்று ஏன் கொள்ளக் கூடாது. எழுத்தறிவித்தவனே தேவனுனல் ஞானம் அளித்தவன் எப்படிப்பட்ட புனித புருடரோ அறியோம். இந்த எல்லை கடந்த கொள்கைகள் தமிழில் இல்லாதிருக்க வடநாட்டிலிருந்து புகுந்து தமிழைக் கெடுத்துவிட்டது என்று சொல்லலாமா!

**பிற்காலக் கொள்கை :** பின்வந்த மற்ருெரு சதக ஆசிரியர் ஆசான் மாணவன் இலக்கணங்களைச் சொன்ன போது மிதமீறியதும் பகுத்தறிவுக்குப் புறம்பானதுமான கருத்துக்களை வெளியிட்டிருக்கிருர். அறப்பளீசுவர சதகத்தில் அம்பலவாணக் கவிராயர் கீழ்க்காணுமாறு கூறியுள்ளார்.

" வைதாலு மோகொடுமை செய்தாலுமோ சீறி
மாருு திகழ்ந்தா லுமோ
மன துசற் ருகிலும் கோணுது நாணுது
மாதா பிதா எனக்குப்
பொய்யாமல் நீயென்று கனிவொடும் பணிவிடை
புரிந்து பொருள் உடல் ஆவியும்
புனி தவுன் றனதெனத் தத்தஞ்செய் திரவுபகல்
போற்றிமல ரடியில் வீழ்ந்து
மெய்யாக வேபரவி உபதேசமது பெற
விரும்புவோர் சற்சீடராம்
வினைவே ரறும்படி அவர்க்கருள் செய்திடுவதே
மிக்கதே சிகாதகடன்

ஐயாபுரம் பொடிபடச் செய்த செம்மலே
அண்ணல் எமதருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே ”

என்ற செய்யுளில் கண்ட பொருளைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். இக்கொள்கை அறிவற்ற காட்டுமிராண்டிகளுக்குத் தகுமன்றி அறிவு பெற்ற பண்பாடுள்ள மக்களுக்குத் தகாது என்பாம் அல்லவா ?

**குருவின் பண்புகள் :** குரு என்ற நிலையைக்குறிக்கும் தனிச்சொல் தமிழில் இல்லாதபோது அந்தக் குருவின் பண்புகள் எவ்வாறு இருக்கும். இவை யெல்லாம் பின் நாளின் கற்பனைகளே. யாகத்தில் பசுப்பலி கொடுத்தல் பண்டைய தமிழரில் இருக்கவில்லை. ஏனெனில் அவைகளைக் குறிக்கும் தனித்தமிழ்ச் சொற்கள் இல்லை. யாகம், அவி, பலி என்பவைகள் வடமொழிச் சொற்களே. வடநாட்டிலிருந்து யாகம் செய்யும் கொள்கை தெற்கே இறக்குமதியான பிறகு அந்தச் சொற்களே ஏற்றுக்கொள்ளப்பட்டன. அதுபோல குரு, குருபக்தி என்ற சொற்களும் அவைகள் பிறப்பிக்கும் கொள்கைகளும் தென்னாட்டிற்குப் புறம்பானவை. தனி மொழிச் சொற்கள் இல்லாததே இதனை நிரூபிக்கின்ற தல்லவா !

**முடிபு என்ன ?** இந்த ஆராய்ச்சிக் கருத்து சில பேருக்குப் பிடியாதிருக்கலாம். என்றாலும் இதனை நன்கு ஆராய்ந்து பார்க்கட்டும். பல நாட்களாகப் பல மக்கள் கொண்ட கருத்துக்குச் சிறிது மாறுபாடாக ஒன்றைக் கூறினால் மனது எளிதில் ஏற்றுக் கொள்ளாதது தான். ஆனாலும் எண்ணங்களை ஒன்றுபடுத்தி ஆராயட்டும். இந்தக் கொள்கையில் ஒரு சிறிதாவது உண்மை இருந்தால் ஏற்றுக் கொள்ளட்டும் என்று இதனை இங்கே எழுதினோம்.

———

# வாழ்த்து

**சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி,**
**மாணவர் மன்றம், பேரூர்**

தமிழ்க் கல்லூரித் தலைவரும், சித்தாந்தம் ஆசிரியருமாகிய சைவ ஞாயிறு, கோவைகிழார், ராவ்பகதூர் - C. M. இராமச்சந்திரஞ் செட்டியார், B.A., B.L. அவர்களுடைய 70-வது ஆண்டுப் பிறந்த நாள் விழாவன்று (19-11-57) அன்னாரைப் பாராட்டிக் கல்லூரி மாணவர் மன்றத்தின் சார்பில் ஒரு கூட்டம் நடந்தது. அதுபோழ்து மணவர்களால் படித்தளிக்கப்பட்ட வாழ்த்து.

தண்ணளியும் நல்லருளும் தகைமைமிகு
நல்லொளியும் தந்து நாளும்
பண்ணவரும் நன்றேத்தப் பணிபுரியும்
நல்லியல்பும் பகைமை யின்றிக்
கண்ணகன்ற ஞாலமுளார் கண்டுநனி
களிகூரக் கனிந்த பார்வைக்
கண்ணொளிசெய் சந்திரனும் கடமைபுரி
நீயுமொரு கணக்கோ கூறாய். 1

மண்ணதனில் எத்துணையோ மன்னவரும்
மற்றையரும் வழிதே தோன்றி
எண்ணுதற்கும் அடங்காராய் இறந்தொழிந்தார்!
நீயெனிலோ, இலக்கி யத்தின்
பண்ணமைப்பும் தென்னாட்டின் பாரதமைந்த
வரலாறும் பாரின் மிக்க
தண்மைமிகு சிவநெறியும் தனித்துயர்ந்த
தமிழ்மொழியும் தழைக்க வாழ்வாய்! 2

இன்னும் நெடிதேயிருந்து இனியவுரை
பலவீந்து இகல்கள் போகத்
துன்னுகலை பலவாக்கித் தூயதமிழ்க்
கல்லூரித் தொண்டும், ஏன்ற
பன்னுகலை அமைப்புகளும் பகர்சைவத்
தூநெறியும், பாரோர் வாழ்த்த
மன்னியெழில் பெற்றோங்க வளர்க !வெந்தை
நின்னுடைய வாழ்நாள் தாமே. 3

மடமையிருள் சென்றொழிய அறிவுமழை
பொழிந்தெம்மை வாழச் செய்தே
கடமைபுரி யெங்கோவே! கடையரெங்கள்
வாழ்நாளை நின்னு ளோங்க
உடைமையென வீகின்றோம் ! உவர்க்காது
தாமேற்று உலகில் நாளும்
விடையவனின் திருவருளால் நெடிதுநீ
வாழ்கவென்று விழைகின் றோமால் ! 4

வாழ்கநீ யெந்தாய் !நின் வாழ்நாளும்
பலவாக ! மாசில் கல்வி
சூழ்க !உயிர் துயர்தீர்க ! நின்னுமை
நினைவாலெம் துயர்கள் யாவும்
ஆழ்க !என்றும் எமையாண்ட வண்ணல்திருச்
சாந்தலிங்கர் அடியை மேவி,
வீழ்ந்தடியோம் வேண்டுகின்றோம். எங்கோவே
நீர்வாழ்க ! இனிது தானே. 5

——

# சைவ சமய அடிப்படைக் கொள்கைகள்

(மலர் - 30 ; இதழ் 11 ; 352-ம் பக்கத் தொடர்ச்சி)

நான்கு படிகள் : சிவனடியார் வழிபாட்டில் : திருக்கோவிலை வலம் வருவர் ; தலையால் வணங்குவர் ; கண்களால் காண்பர் ; கைகளைக் கூப்பித் தொழுவர் ; போற்றுவர் ; புகழ்வர். சிவாலயத்துக்கும் சிவனடியார்கட்கும் வேண்டும் பணிகளைச் செய்வர். இதுவே சரியை. சரியை (உடல் தொடர்பான) நடத்தல் முதலியன செய்தல்.

சரியையைப் பின்பற்றி, ஒழுகும்போது சிவனைப் பூசிக்க அருச்சிக்க மனம் செல்லும். அதனால் மனத்தாலும் உடலாலும் பூசித்தலாகிய சிவ்வழிபாடு செய்வர். இதுவே கிரியை (செயல்).

கிரியையின் வழி ஒழுகி வழிபாடு செய்யச்செய்ய மனம் உலகப் பற்று நீங்கி சிவன் பேரருளை எண்ணி அதில் ஈடுபட்டுத் தன்னை மறந்து தியான வடிவமாகி ஆண்டவன் அருளொடு ஒன்றுபட்டு நிற்பர். இதுவே யோகம் (கூட்டம் ; ஒன்றுதல்).

சரியை கிரியை யோகங்களால் முறையே சிவ வழிபாடு செய்யும் அடியார், முப்பொருள் உண்மை, ஆண்டான் அடிமைத்திறம் விளக்கமாக அறிவர். அப்படி அறியுங்கால் தமது அறிவு ஒழிந்து சிவன் அறிவே தலைநிற்பர். இதுவே ஞானம் (அறிவு.)

இந் நான்கும் காரண காரியமாக நிற்பது. எப்படி அரும்பிலிருந்து பூவும், பூவிலிருந்து காயும், காயிலிருந்து கனியும் முறையே ஒன்றற்கொன்று காரண காரியமாகத் தோன்றுகின்றதோ, அதேபோல் சரியையிலிருந்து கிரியையும், கிரியையிலிருந்து யோகமும், யோகத்திலிருந்து ஞானமும் கிட்டும். எனவே சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கும், சிவவழிபாட்டில் காரண காரிய முறையே ஒன்றைவிட ஒன்று உயர்வான படிகள் ஆகும்.

நல்வகை வழி : சிவ வழிபாட்டில் கைவரப்பெற்றோர் தம்மைச் சிவனுக்கு அடிமையாகவும் பிள்ளையாகவும், தோழ

ராகவும் கொள்வர். இன்னும், இவ்வாறெல்லாம் கொள்ளாது சிவஞானம் கைவரப் பெற்றவர், ஞான நிலையில் மாத்திரம் நின்றும் வழிபடுவர். இந் நான்கு வழிகளும் முறையே அடிமை வழி (தாசமார்க்கம்) பிள்ளைமுறைவழி (புத்திர மார்க்கம்) தோழமை வழி (சகமார்க்கம்,) ஞானவழி (சன் மார்க்கம்) என்று கூறப்படும்.

சிவ சின்னங்கள் : மக்கள் தங்கள் கடவுட் கொள்கை பற்றிச் சிற்சில சின்னங்களை அணிவது தொன்று தொட்ட மரபு ; அவையே திருநீறு (விபூதி) அட்சமணி (உருத்தி ராட்சம்.) [பூதி - செல்வம். விபூதி - உயர்ந்த செல்வம். நீறு - பஸ்மம். திரு - அதன் உயர்வை விளக்குவது. உருத்தி ராட்சம் - உருத்திரனுடைய கண்] விபூதி உருத்திராட்சங்களை யணிதல் சைவர்களின் தொன்றுதொட்ட வழக்கம்.

நெருப்பின் மேல் நீறு பூத்திருத்தல் வெளிப்படை. சிவன் சோதி வடிவன். ஆதலின் ருத்ராக்னியின் மீதுள்ள வீரியம் நீறு எனப்படும். விபூதி வெண்மை நிறம். வெண்மை தூய்மைக்கு அறிகுறி. விபூதி பசுவின் சாணத்தை உலர்த்தி நெருப்பிலிட்டு நீறாக்குவதால் உண்டாகின்றது. ஆன் மாவின் (பசு) மும்மலம் ஞான நெருப்பினால் எரிக்கப்பட்டுத் தம் வலியிழந்து அடங்கும் என்பது திருநீற்றின் குறிப்பு. எனவே, விபூதி அணிதல் மும்மல நாசம் குறிக்கும். இன்னும், சர்வ சங்கார காலத்தில் எல்லாம் நீறாய் ஒழியும் என்னும் உலக வாழ்க்கையின் அழிவும், உயிர் தனது மலம் நீறான பின்னரே உண்மை உணர்ச்சி பெற்றுப் பேரின்பமுறும் என்னும் தத்துவமும், திருநீறு இடுதலின் குறிக்கோள் ஆகும்.

முப்புரம் எரிக்கத் தனது கண்களை மூட அவைகளி லிருந்து வெளிப்பட்ட நீர்த்துளிகள் இறைவன் எண்ணப் படி உருத்திராட்ச மரங்களாயின. அம் மரங்களின் காய்களே உருத்திராட்ச மணிகள். இவ்வரலாற்றில் இரண்டு உண்மை கள் உணரலாம். ஒன்று, உருவமில்லாத இறைவன் உருவத் திருமேனி தாங்கித் தனது திருக்கண் நோக்கத்தால் மும்மல

காரியங்களை ஒழியச் செய்வான் என்பது. இரண்டு, வருந்திய உயிர்களின் துயருக்கு இரங்கி அருட் கண்ணீர் பொழிந்து அருள் செய்வான் என்பது.

திருநீறு அணிதல் மலத் தொடர்பு அற்றுத் தூய்மை நாடுதற்கறிகுறி ; அக்கமணி அணிதல் - ஆண்டவன் அருட் குணத்திற்கு அறிகுறி.

திருக்கோயில் : இறைவன் காட்டும் பேரருளை அறிந்து அவர்பால் அன்புகொண்டு வழிபாடியற்றக் கருதுவோர், அவரை ஒரு வடிவத்தில் பாவித்தல் வேண்டும். இன்றேல் மனம் ஒரு வழிப்படாது. மனத்தின் இயல்பு ஒன்றைப் பற்றி நிற்பது. ஆதலின் இறைவழிபாட்டிற்கு இலக்காக ஒரு உருவம் வேண்டப்படும். அந்த உருவமே விக்ரகம். சிவலிங்கம் சிவபிரானை எண்ணி வழிபடுதற்கு உதவியாக இருக்கும் குறி. சிவபிரான் ஐந்தொழிலால் உலகத்தைச் சித் தரிக்கின்றார். லிங்கம்—குறி சித்தரித்தல். இதன் வடிவம் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட உருவமும் ஆகாமல் அருவமும் ஆகாமல் அருவுருவமா யுள்ளது. இது அவர் குறிப்பிட்ட உருவமுடையவர் அல்லர் என்றும், உயிர்கள் வழிபட்டுய் தற்குக் கருவியாக ஒருவகை உருவத்தில் பாவிக்கப்படுவன் என்றும் காட்டுகிறது. எனவே இவ்வுருவம் இறைவழிபாட் டிற்குக் கருவியே. எங்குமுள்ள இறைவன் இவ்வுருவத்தில் பாவிக்கப்பட்டு அன்பர்களின் தியான வழிபாட்டுக்கு இரங்கி அருள் புரிவன். இத்தகைய லிங்கத்திற்கு இடமாயுள்ளது சிவாலயம். சிவாலயத்தைக் கண்டதும் சிவலிங்க நினைவும் சிவலிங்கத்தைக் கண்ட போது சிவன் நினைவும் வரும். அந் நினைவு வரவே, அப்பெருமான் காட்டும் பேர்அருள், பேர் ஆற்றல் முதலியன மனதில் நின்று அவர்பால் பேரன்பு காட்டுதற்கு உதவுகின்றன. ஆகவே திருக்கோயில் சிவ னிடத்து மாறா அன்பு காட்டுதற்குச் சிறந்த கருவியாக அமைந்திருப்பது.

வீடுபேறு : மனிதப் பிறப்பை அடைந்தோர் அறம் பொருள் இன்பம் அடைந்து அவற்றை பாதுகாத்தலில்

முனைந்து நிற்றல் இயற்கை. அற வழியில் பொருள் ஈட்டி அறநெறி வழுவாமல் இன்பந் துய்த்தல் இழுக்கு அன்று. எனினும், இவ்வுலக இன்பம் நிலையற்றது என்னும் உண்மை தோன்றினபின் நிலையுடைய இன்பத்தில் மனம் செல்லும். அந்நிலையுடைய இன்பத்தைத் தருவதே முக்தி (விடுதலை). உலகப்பற்று நீக்கமே பேரின்பம். வீடுபேற்றுக்குக் காரணம் அதுவே. மனம் ஒன்றைப்பற்றியே நிற்கும்; ஆதலின் உலகப்பற்று நீங்க நீங்க இறைவனிடத்துப் பற்று மிகுதியாகவளரும். உலகப்பற்று முற்றும் நீங்கிய பின்னரே பிறப்பு நீங்கும். பிறவி உள்ளவரை பற்று ஒழியாது. பிறவிக்குக் காரணம் உலகப்பற்று. அதனால் சிறிது சிறிதாக உலகப்பற்றை அறுத்துச் சிவனிடத்து அன்பு கொள்ளக் கொள்ளப் பிறவி நீங்கி என்றும் அழியாத பேரின்பம் அடையும்.

மனிதப்பிறப்பை யடைந்தோர் அறம் பொருள் இன்பம் வீடு (—) என்ற உறுதிப் பொருள்களை அடைதற்கு உரியோர். மனிதப் பிறப்பினால் அடையக்கூடிய சிறந்த பொருளாக இருப்பது வீடுபேறு. இவ்வீடு பேறு ஏனைய மூன்றையும் அறநெறி வழுவாமல் அடைந்து ஒழுகுதலின் பயனாக வரக்கூடியது.

சீவன் முத்தர் : உயிர்களின் பிறவிக்குக் காரணம் இருவினை. அவையே கன்மம். அக்கன்மம் சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என மூன்று வகைப்படும். இருவினைகளையும் ஒன்றாக மதித்து ஆணவத்தின் வலிமை குன்றப்பெற்று அதனால் சிவனது அருட்சத்தி பதியப்பெற்று இடையறாத முதிர்ந்த அன்பினால் அவன் திருவடிகட்குத் தொண்டு பூண்டு ஒழுகுவோர் உடலோடு இருப்பினும் முத்தரே. அவர்கட்கு உள்ள வினைக்கூட்டத்தில் சஞ்சிதவினை சிவஞானத் தீயினால் எரிக்கப்பட்டு விடும். அவர்கள் யாவும் சிவன் செயலெனக் கொள்பவர். ஆகலால் மேல்வரக் கடவதாகிய ஆகாமிய வினை அவர்கட்கு இல்லை. உடல் எடுத்தது பிராரத்த வினை. ஆதலின், அவ்வினை உள்ள அளவும் உடல்

நிலைத்து நிற்கும். நிற்பினும் அவர் முக்தரே. அவருக்கு உள்ள முக்தி சீவன் முக்தி. அவர் சீவன் முக்தர். இத்தகைய சீவன் முக்தி நிலையில் உள்ளோரையும் பல பிறவிப் பழக்கத்தால் மும்மலங்களின் குற்றம் சிற்சில சமயங்களில் அணுகும். அவர் முக்தராதலால் தமது சிவஞான நீரினால் அக்குற்றங்களைக் கழுவி ஐந்தெழுத்தை ஓதுவர். அதனால் வாசனாமலம் சாராது நீங்கும். இன்னும் அவர் சிவாலயத்தையும் சிவனடியார் திருவேடத்தையும் சிவன் எனவே தொழுது பேரின்பம் எய்துவர்.

---

# விடை ஊரும் விமலன்*

அயனுந் திருமாலும் வந்து பிறப்பதற்கு ஆசைப்படு கின்ற இச்சிறந்த உலகத்தில் பலவகைப்பட்ட பிறவி களுக்குள் மிக உயர்ந்த ஒன்ருயிருக்கின்ற மனிதப் பிறவியை அடைந்த நாம் பல பொருள்கள் உடையராயிருக்கின்ருேம். அவற்று ளெல்லாம் மிகச் சிறந்தது அறிவு. எது ஒன்று உடைமையால் எல்லாம் உடையராய்க் கருதப்படு கிருேமோ, எது ஒன்று இன்மையால் மற்ற யாவுமிருந்தும் ஒன்றும் இலராய்க் கருதப்படுகின்ருேமோ, அது அறி வாகும்.

" அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர் "

இவ்வறிவு ஒன்றே மனிதனைச் சிறப்பிப்பது. இஃது ஆராய்ச்சி அறிவு, அனுபவ அறிவு என இருவகைப்படும். ஆராய்ச்சி அறிவு இருந்தபின் தான் அனுபவ அறிவு விளங்கும். ஆராய்ச்சி அறிவை நாம் முன்னர்த் தொழிற் படுத்த வேண்டும். அறிவு தொழிற்பட மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து கருவிகள் உதவி செய்கின்றன. இவற்றுள் தூரத்தில் சென்று அறியும் இயல்புடைமையின் கண் மிகச் சிறந்த கருவி. கண்ணுக்குப் புலப்படும் பொருள் களை முதலில் ஆராய்ந்து பின் புலப்படாத பொருளை ஆராய்ந்து அதைப் பெற்று அதனல் உண்டாகும் இன் பத்தை அனுபவிக்க வேண்டும் என்று நிச்சயிப்பவரே அறிவு பெற்ருராவர்.

கண்ணைக் கொண்டு ஆராயப் புகின் அதற்குப் புலப் படுவது உலகமும் அதிலுள்ள பலவகைப்பட்ட உடல்களு மாம். ஐம்பூத இயற்கை நிலை உலகம், அவற்றின் மாறிய நிலை உடல். உடல்கள் அவன், அவள், அது எனும் மூவகைப் பகுப்பினவா யிருக்கின்றன. ஒவ்வொரு பகுப்பும் பலவேறு

---

* 27-4-37ல் மயிலையில் நிகழ்த்திய சொற்பொழிவு. கச்சி முனிசாமி உடையார் அவர்கள் குறிப்பு.

வகைப்பட்டிருக்கின்றன. பலவேறு வகைப்பட்ட அவயவப் பகுப்புடைய இவ்வுலகம் அறிவுடையதா யிருக்கவும் இல்லை. உலகத்தை ஐயந் திரிபற உண்மையாய்க் காண்கின்றோம். ஆகவே கண்ணறிவு கொண்டு உலகத்தை ஆராய நுழைந்த காலத்து அஃது பலவேறு வகையாய், அவன், அவள், அது எனும் அவயவப் பகுப்புடையதாய்க், கண்ணுக்குப் புலப்படுவதாய், அறியாமை உடையதாய்த் தோன்றுகிறது. ஒரு தன்மைத்தா யிராமல் பல வேறு வகையாய் மூன்று அவயவப் பகுப்புடைமையின் உலகம் இயற்கை யன்று, நித்திய மன்று, என்பதும்; அறிவற்ற பொருளானமையின், தானே தொழிற்படும் சக்தியின்றி ஒருவனால் தொழிற்பட வேண்டுதலின் அது செயப்படுபொருள் என்பதும்; செயப்படு பொருளாய்க் கண்ணால் காணப்படுவதால் அழியும் பொருள் என்பதும் நன்றாய் விளங்குகின்றன.

செயப்படு பொருளாகிய உலகத்திற்குக் கர்த்தா ஒருவன் இருக்க வேண்டும். அவன் நம்மில் ஒருவனன்று. ஏனெனில் நம்மில் யாருக்கும் இவ்வுலகத்தில் ஒரு சிறு பாகத்தையேனும் உண்டுபண்ணிக் கொள்ள ஆற்றலில்லை; நம் உடலில் ஒரு சிறு அவயவத்தையும் உண்டுபண்ணிக் கொள்ள நமக்கு ஆற்றலில்லை என்றால், இப்பெரிய அதிவிசித்திரமான உலகத்திற்கு நாம் எங்ஙனம் தலைவராகக் கூடும். ஆகவே உலக கர்த்தா உயிர் வர்க்கங்களில் ஒருவனல்லன். அவனைத் தேடப்புகின் அவன் உலகத்தைக் கடந்திருப்பான். குடத்தைச் செய்த குயவன் குடத்தைக் கடந்திருப்பது போல். அதனால் அவன் கடவுள். அவன் உலகமாகிய ஐந்து பூதங்களில் ஒன்றல்லன், அவை ஒன்று சேர்ந்த உலகமு மல்லன், உலகத்திலுள்ள உயிர் வர்க்கங்களிலும் ஒன்றல்லன். எனினும் அவன் நம்மால் ஆராயத் தக்கவன். உலகத்தைக் கொண்டு ஆராய்ந்தால் கொஞ்சம் தோன்றுவான். இப்படி ஆராய்ந்து அறிந்து அறிந்து அனுபவித்த பெரியார்களின் வாக்கு இதற்குச் சான்றாயிருக்கிறது.

"மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை
மலையல்லை கடலல்லை வாயுவல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை
யிரவல்லை பகலல்லை யாவுமல்லை

பெண்ணல்லை யாணல்லை பேடல்லை
பிறிதல்லை யானும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
உணர்வரிய ஒற்றியூருடைய கோவே '' —அப்பர்.

" யாவையும் எவருந் தானாய் அவரவர் சமயந்தோறும்
தோய்விலன் புலனைந்துக்கும் சொலப்படான் உணர்வின்மூர்த்தி
ஆவிசேர் உயிரி னுள்ளான் ஆதுமோர் பற்றிலாத
பாவனை யதனைக் கூடில் அவனையும் கூடலாமே —நம்மாழ்வார்.

" பெரியாய் நீயே '' என்றமையால் அவன் பெருமை யுடையவன் என்பது விளங்கும். பெருமை யுடையதைத் தான் நாம் பேசவேண்டும், சிறுமையுடையதைப் பேசின் அச்சிறுமை நம்மையே வந்தடையும். நாம் அறிவது தோன்றுவதில்லை. இறப்பு பிறப்புகள் நிகழ்கின்றனவே யெனின் இறத்தல் அழிதலல்ல. இறத்தல் என்னும் சொல் முடிதல் தாண்டுதல் எனப் பொருள்படும். இறக்கின்றோம் என்றால் நாம் ஒன்றைத் தாண்டுகின்றோம் என்பதாகும். அதாவது தூல உடலைத் தாண்டுகின்றோம். " தூல உடல் அரவினது தோல் என்ன நீங்கவே '' என்றார் சிவஞான முனிவர், அகிலாண்டேஸ்வரி யம்மை பதிகத்தில். உலகமோ அழியுந் தன்மை யுடையது. உலகத்தை ஆராயப் புகுந்து, அது அழியுந் தன்மையுடையது, முடிவில் ஒரு பொருளு மில்லை என்று கண்டால் மலை கல்லியும் எலியும் அகப்பட வில்லை என்பது போல் நம் ஆராய்ச்சி பயனற்றதாகிவிடு மல்லவா ! இப்படி அயர்வதற்கு இடந்தராது அப்பருடைய உறுதியான வாக்கு, "உள் நல்லை நல்லார்க்கு" என்று அது உணர்த்துகிறது. நம்மாழ்வாரும் " உணர்வின் மூர்த்தி '' என்றோதுகின்றார். கடவுள் நல்லவர்கள் உள்ளத்தில் இன்பந் தருபவனாயிருக்கின்றான். அவனை ஆராய ஆராய இன்ப முண்டாகும். ஆராயாதிருக்கத் துன்பமே உண்டாகும். ஆராய்ச்சியினால் மட்டுமே அவ்வின்பப் பொருளை அனுபவிக்க முடியும்.

இனி வடமொழி நூல்களில் சென்று ஆராயுமிடத்து ஸ்வேதாஸ்வதரம் 5-வது பாகம் 10-வது ஸ்லோகம், " நீ அவன் அவள் அது வல்ல" என்று கடவுளைப் பேசுகிறது. தைத்ரீயம் "எந்த இடத்திலிருந்து உன்னால் காணப்படுகின்ற இந்த பூதங்கள் தோன்றிற்றோ ; எதனாலே காக்கப்படு

கிறதோ, எதில் இவை இலயம் அடைகிறதோ, அந்தப் பொருளை நீ அறிய முயல்" என்று கூறுகிறது. வியாச சூத்திரம் (2-வது சூ.) "எங்கே யிருந்து உலகங்கள் தோன் றிற்ருே அது" என்றமையால் உலக காரணன் கடவுள் என்பது விளங்குகிறது. "ஆன்மாவின் அறிவு சுத்தப் படுவது ஈஸ்வரனை அறிவதால்" என்ருர் நீலகண்ட சிவாச் சாரியார். நாம் அறிவையும் அறியாமையையும் கூடிய வராய் இருக்கின்ருேம். அறியாமையால் துக்க முறுகின் ருேம். அறிவு சுத்தப்பட கடவுளை ஆராய வேண்டும். 'ஒரு மரம், அதில் ஒரு புருஷன் மோகனுகி ஈஸ்வரனு யில்லாமை யால் அடிமையாக யிருப்பதால், எப்போதும் துக்கமுடைய வனுயிருக்கிருன். தன்னிடத்திலேயே யிருக்கிற ஈஸ்வரனை நினைத்தால் மோகம் நீங்கினவனுவான்" என்ற அபிப்பிரா யத்தை முண்டகம் தெரிவிக்கிறது. ஈசாவாசியமும் இதே அபிப்பிராயப்படுகிறது. நமக்குள்ள இயற்கை யறிவும், பல நூல்கள் கற்றதன் பயனுய் வந்த அறிவும், குருமொழியால் உண்டான அறிவும் ஆகிய இவ்வள விருந்தும், ஒன்றைத் தப்பென்று தெரிந்தும் அதை விடாமலிருப்பது மோக மாகும். வாசனை விளாம்பழத்தைக் காட்டி விடுவதுபோல் மோகம் ஆணவமல உண்மையைக் காட்டி விடுகிறது.

ஆணவம், கர்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும் பதின்மூன்று வகையாக வேலை செய்கின்றன. மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் ஆகிய ஏழும் ஆணவமல காரியம். மோகம் எது என்பது முன் னர்க் கூறப்பட்டது. தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் மதமாகும். கிடைக்காத பொருளில் ஆசை கொள்ளுதல் இராகம். கிடைத்த பொருள் பிரிந்ததின் காரணமாகப் படும் துக்கம் கவலை. இறப்பை நோக்கி உற்ருர் உறவினரும் பிரிய நேரிடும் என்று நினைந்து வருந்துதல் தாபம். இறந் தாரை நினைத்து உயிரின் அறிவை இழந்து உடலும் இளைத்தல் வாட்டம். உலகத்தில் எல்லாம் வினைவழியாய் நிகழ்கின்றது என்பதை மறந்து, தன்னுல் நிகழ்கிறது என்றும், தான் பிறருக்கு நன்மை செய்ததாகவும், தான் பிறருக்குத் தீமை செய்ததாகவும் நினைத்தல் விசித்திரம். இன்ப துன்ப உணர்ச்சி கர்ம மல காரியம். நமக்குக் கிடைத்த உடம்பு அதிலுள்ள மனம், நாம் இருக்கும் இடம்,

அநுபவிக்கும் போகப் பொருள்கள் மாயாமல காரியம். ஆகவே மூன்று மலங்களும் பதின்மூன்று வகையாக வேலை செய்கின்றன. நம்முடைய அறியாமை இப் பதின் மூன்று வகையா யிருக்கின்றது.

இப்பதின்மூன்றும் நம்மால் ஆராயப்படும் பொருளாகிய கடவுளுக்குக் கிடையாது. அப்பொருள் அறியாமை பொருந்திய நம் மனதைச் சுத்தப்படுத்தித் துக்கத்தைப் போக்கி இன்பத்தைத் தருவது. "சிவபெருமானாகிய கடவுளே விமலன், நமக்கு மங்களத்தைச் செய்கின்றவன். நாம் மற்றெல்லாவற்றையும் நீக்கிவிட்டு அவனைத் தியானிக்க வேண்டும்" என்கிற அபிப்பிராயத்தை அதர்வசிகை என்னும் உபநிஷத் தெரிவிக்கிறது. எனவே அவன் பதின் மூன்று வகையாக வேலை செய்யும் மலங்களினின்றும் நீங்கினவன். . மலம் அனாதியே இல்லாமையின் சிவன்.

"நிறைமலம் அனாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்."

என்றார் சிவஞான முனிவர். நம்முடைய மலங்கள் கழிய நாம் மலமில்லாதவனை - விமலனை - தியானிக்க வேண்டும்.

எவன் தன் ஆன்மாவில் உள்ள கடவுளைப் பார்த்தானோ அவன் தான் தீரன் என்று கடோபநிஷத் பேசுகிறது. அக் கடவுள் தூல சரீரத்திலும் (தூணிலும்) சூக்கும சரீரத்திலும் (துரும்பிலும்) இருப்பான். துக்கத்தை அடைத்து வைத்திருப்பவன் துக்கத்தினின்றும் எப்படி நீங்குகிறதில்லையோ அதுபோல் கடவுள் உள்ளே யிருந்தால் மட்டுமே துன்பம் போவதில்லை. துக்கத்தை வெளியில் கொட்டி ஆற்றிவிட்டவன் எப்படி அதனால் துன்புறுவதில்லையோ அதுபோல் உள்ளிருக்கும் கடவுள் வெளியில் வந்தால்தான் உயிர்கள் துன்பம் நீங்கி இன்பம் அடையும். "ஆவுறு பிணிகெட ஆவின் பால் கரந்து ஆவினுக்கு ஊட்டல்போல்" உள்ளிருக்கும் கடவுளை வெளிவரச் செய்து மறுபடியும் உள்ளே போகச் செய்தால்தான் நமக்கு இன்பம் கிடைக்கும்.

"என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு வன்னுளன்

என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே ”

என்ருர் நாவுக்கரசர். உள்ளிருக்கும் கடவுளே வெளிவரச் செய்து மறுபடியும் உள்ளே நிறுத்தி வைக்கும் அறிவும் ஆற்றலும் மலத்தால் கட்டுண்டுள்ள உயிர்களாகிய நமக்கு இல்லை. ஆகையால் கருணுமூர்த்தியாகிய கடவுள் உயிர்கள் படும் துன்பத்திற் கிரங்கி அவரே திருமேனி தாங்கி வெளி வருகின்ருர். அவர் கொள்ளும் திருமேனி கர்மத்தாலன்று கருணையினுலாகும். “ அருளால் மேனி சாத்தி ” என்ருர் ஒரு பெரியார். “ நந்தம் கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு ” என்றது சித்தியார். கருணை, தயை, கிருபை, உமை என்பன ஒரே பொருளைக் குறிப்பன. “ உமையலா துருவ மில்லை ” என்னும் அப்பர் வாக்கை நோக்கவும்.

கருணையினுல் கடவுள் வடிவங் கொள்ளும்போது முற்றறிவுடையவனுதலின் உயிர்களின் பக்குவத் தன்மைக் குத் தக்கவாறு ஒன்பது வகைத் திருமேனிகள் கொள்ளு கின்ருன். நாதம், விந்து, சத்தி, சிவம் எனும் அருவத் திருமேனி நான்கும், இலிங்கமெனும் அருவுருவத் திருமேனி ஒன்றும், பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் எனும் உருவத் திருமேனி நான்கும் ஆக ஒன்பது வடி வங்கள் கொள்கின்ருன். பிரமனுய்ப் படைத்தும், விஷ்ணு வாய்க் காத்தும், உருத்திரனுய் ஒடுக்கியும், மகேஸ்வரனுய் மறைத்தும், நாதவிந்து சத்தி சிவமாய் அருளியும் ஐந்தொழில் இயற்றுகின்ருன். நிஷ்கிரியத்திற்கு அருவுருவத் திருமேனி கொள்கின்ருன். இவ்வொன்பது வடிவங்களாகியும் இவற் றைக் கடந்தும் அவன் இருக்கின்ருன்.

கடவுள் கொள்ளும் உருவத்திருமேனிகள், போக வடிவம், கோர வடிவம் யோகவடிவம் என மூவகைப்படும். உயிர்கள் உலக இன்பங்களை அனுபவிக்கப் போக வடிவ மும், உயிர்களின் வினைகழியக் கோர வடிவமும், உயிர்கள் முத்திபெறயோக வடிவமும் கொள்ளுகிருர்.

“ போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியா யோகமுத்தி உதவுவதல் அதுவும் ஓரார்
வேகியா னுற்போற் செய்த வினையினை வீட்டலோரார்
ஊகியா மூடரெல்லாம் உம்பரின் ஒருவன் என்பர் ”

அம்மையோடு கூடியிருக்கும் வடிவம் போக வடிவம் அதிகை முதலிய வீரஸ்தானங்களில் அம்பு வில் முதலிய ஆயுதங்கள் தாங்கி இருக்கும் வடிவம் கோரவடிவம். தட்சிணு மூர்த்தி வடிவம் யோக வடிவம்.

ஈண்டுப் பேசப்படுவது போக வடிவம். “ இடப்பாக மாதராளோடியைந் துயிர்க்கின்பமென்று மடைபரனும் ” என்றமையால், உயிர்க்குப் போகத்தைப் புரிய இறைவன் அம்மையோடு கூடிப் போக வடிவங் கொண்டான். உலகத்தின் சாரம் தர்மம். “ தர்மசாரம் இதம் ஜகத் ” என்ருர் வால்மீகர். தருமத்தைப் போற்றிடின் அன்பு வளரும், அன்பு முதிர அருள் விளங்கும். அன்பும் அருளும் வந்தவழி தவம் சித்திக்கும். பின் மனந்தெளியப் பெற்று உயிர் கடவுளைச் சேரும். சேரவே, பிறப்பு நீங்கிப் பழமையாய்ச் சார்ந்திருக்கப்பட்ட மும்மலங்களும் கழிந்து இன்பமுண்டாகும். எனவே தருமத்தின் உயர்வை யாரே அறையவல்லார்.

“ தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும்
அருளெனுங் குழவியு மணையு மாங்கவை
வருவழி தவமெனு மாட்சி யெய்துமேல்
தெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால்.

சேர்ந்துழி பிறவியும் தீருந் தொன்மையாய்ச்
சார்ந்திடு மூவகைத் தளையும் நீங்கிடும்
போந்திட லரியதோர் பேரின்ப மதனை
ஆர்ந்திடு மதன்பரி சறைய வல்லதோ ”

இத்தகைய தருமம் மகா சங்கார காலத்தில் தானும் அழிய நேரிடு மென்றேங்கி யோசித்து விடையுருக்கொண்டு இறைவனை யடைந்து “ யான்இற வாமையும் தேவரீருக்கு வாகனமாகுந் தன்மையும் மிக்க வலியுடைமையும் பெற்று உயிர்வாழ அடியேனுக் கருளவேண்டும் ” என்று வேண்டி நின்றது. அடைந்தோரைக் காக்கின்ற அருட்கடலாகிய இறைவர் தரும தேவதையை ஏற்றுக்கொண்டு எப்போதும் நீங்காது தன்னிடத்து ஊர்தியாய் வைத்துக்கொண்டார். அந்நாள் முதல் இறைவன் அம்மையோடும் முருகப் பெருமானேடும் தரும தேவதையாகிய விடையை ஊர்ந்து அடியார்களுக்குக் காட்சி கொடுத்தருளா நின்றனன்.

# தேரூர்ந்த திரிபுராந்தகன்*

இவ்வுலகத்தைக் காணும்போது நமக்குக் கடவுளைப் பற்றிய எண்ணம் உண்டாகிறது. இவ்வுலகத்தை மாயை என்ற ஓர் இருள் மறைத்துக்கொண்டிருக்கிறது. அவ்விருள் ஒருவாறு நீங்கும் காலம் சம்ஹார காலம் என்று சொல்லலாம். ஆண்டவன் மகாசம்ஹாரத்தை நம் பொருட்டே செய்கிறான். சிருஷ்டி, திதியைக் காட்டிலும் சம்ஹாரமே மேலானது. சம்ஹாரத் தொழில் கொலைத்தொழில் அன்று. அஃது அப்பதத்தின் பொருளைக் கூர்ந்து நோக்கின் விளங்கும். சம்ஹாரம் என்பது வடமொழிப் பதம். அதைச் சம், ஹாரம் என்று இரு சொற்களாகப் பிரிக்கலாம். சம் என்பது செவ்வையாக என்று பொருள்படும். ஹாரம் என்பது இழுத்தலாகும். ஆண்டவன் இவ்வுலகில் அல்லற்படும் உயிர்களைச் சற்று இளைப்பாற்றும் பொருட்டுத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கிவைத்துக் கொள்கிறான். இதுவே சம்ஹாரமாகும். 'அழிப்பு இளைப்பு ஆற்றல்' என்பர் அருணந்திசிவனார். இவ்வாறு உயிர்களின் இளைப்பை நீக்கும் ஒரு தொழிலை எவரே கொலைத் தொழில் என்பார் ? கடவுள் நமது யஜமானன். அன்பு வடிவாக உள்ளவனே யஜமான். சம்ஹாரத் தொழிலைச் செய்வதாலேயே ஆண்டவன் 'ஹரன்' என்று அழைக்கப்பட்டான். இரக்கமே ஆண்டவன் உரு என்பதைக் குறிக்கவேண்டியே திருநாவுக்கரசு சுவாமிகளும் திருமறைக்காட்டுத் தேவாரத்தில் " இரக்கமொன்றிலீர் " என்று கூறினர்.

**கடவுள் அருள்திறம்**

நமக்கு அடங்கினவன் கடவுள் ஆகான் ; கடவுள் நமக்குள் அடங்காதவன். அப்படிப்பட்ட கடவுளின் தன்மை யாது ? நம் நிலைமைக்குத் தக்கவாறு அவன் நம்மைப் பக்குவப்படுத்துதல் வேண்டும். உதாரணமாக ஒரு பள்ளிக்

---

*ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் திருமயிலையில் 29-4-37-ல் நிகழ்த்தியது. திரு. நே. த. கிருஷ்ணசாமி முதலியார், பி.ஏ., எல்.டி. அவர்களின் குறிப்பு.

கூடத்தை எடுத்துக்கொள்ளலாம். அப்பள்ளிக்கூடத்தில் பல வகுப்புகள் இருக்கின்றன. வெவ்வேறு வகுப்புக்களில் படிக்கும் மாணவர்தம் படிப்பும், திறனும் வெவ்வேறே. அவரவர் நிலைமைக்குத் தக்கவாறே ஆசான் கல்வி புகட்டு வான். ஆசானைப் போன்றவன் கடவுள். பிள்ளைகளே ஆன்மாக்கள். ஆன்மாக்களின் தன்மைக்கேற்பப் பரிபக்கு வப்படுத்துதலே ஆண்டவன் அருள்திறம். எப்படி ஆசான் பிள்ளைகளிடத்துத் தம் திறமனைத்தையும் காட்டமாட் டாரோ, அவ்வாறே ஆண்டவனும் ஆன்மாக்களிடத்துத் தன் திறமனைத்தையும் காட்டமாட்டான்.

நம்முடைய சக்தியெல்லாம் மூன்றில் அடங்குவன. அவையே நாமம், ரூபம், கிரியை எனப்படும். அவன் நம்மை ஆட்கொள்ள ஓர் இடத்தை அடைகிறான். உதாரண மாக மயிலாப்பூரை எடுத்துக்கொள்வோம். அவனது வடிவம் ஆண் பெண் ஒன்றியது. நாமும் நம்முடைய சக்தியும் ஒன்று பட்டாலேயே நாமாகிறோம். நம்மிடத் திருந்து சக்தியை வேறாகப் பிரித்தல் முடியாது. அவன் ஆண் பெண் வடிவோடு பிள்ளைகளுடனும் காட்சியளிக் கிறான். இறுதியில் நோக்குழி, எல்லாம் அவனாகவே இருக்கிறான். எனவே, வேதம் ஆத்மாவே புத்திரனாகிறான் என்று கூறுகிறது. நாம் கடவுளை நினைக்கும்போது நம்மைப் போலவே அவனைப் பாவிக்கிறோம். அவன் பல வாகனங் களில் வருதல் அவனுடைய உயர்வைக் காட்டுவது. அவ் வாறு வாகனங்களின்மீது வரும் கோலத்தையே நாம் உத் ஸவம் என்கிறோம்.

**உத்ஸவம்**

இனி உத்ஸவத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வாம் உத்ஸவம் என்னும் பதம் உத்ஸூயுதே என்னும் பதத்தி லிருந்து பிறந்ததாகும். சுகத்தை உண்டுபண்ணுவதென்பது அதன் பொருளாகும். உத்=மேலான பரமேசுவரனுடைய, ஸவம்=வெளியுலாவுதல் என்றும் பொருள் கொள்ளலாம். ஜனங்களை நல்வழிப்படுத்தல் என்பது இதன் பொருளாகும். உத்ஸவத்தின் தாத்பரியங்கள் நான்கு. அவை வருமாறு:— (1) சிருட்டி செய்தல். (2) தம்மை வெளிக்காட்டல். (3) சுகத்தைக் கொடுத்தல். (4) வந்து பார்த்தல். முன்னர்க்

கூறியவாறு சம்ஹாரத்தில் அனுக்கிரகம் அடங்கும். சம்ஹாரம் என்பதன் பொருளே துக்கம் போய்ச் சுகம் வருதல் என்பதாகும். ரதாரோகணம் சம்ஹாரத்தின் பாற்பட்டது. தேர் என்றால் சம்ஹாரம் என்று பொருள்.

இரதோத்ஸவம் சில ஊர்களில் ஏழாவது நாளிலும், சில ஊர்களில் ஒன்பதாவது நாளிலும் நடைபெறுகிறது. இரதோத்ஸவத்தின் உட்கருத்தை உன்னிப் பாருங்கள். பூமியையே ஆண்டவன் இரதமாகக் கொண்டிருக்கிறான். பூமிக்கு இருவித ரூபம் உண்டு. ஒன்று பிராகிருதம்; நேரிற் காண்பது. மற்றொன்று தெய்விகம். பூமியைப் பூமாதேவி என்று கூறுதல் உபசரிப்பு. இது, தேவதையை அதிதேவதை என்று கூறினாற்போல. இத்தெய்விகத் தன்மையைக் கருதியே திருவிளையாடற் புராண உத்தரகுமாரப் படலத்தில் 'மேருமலை மனைவியுடன் பேசினான்' என்றெல்லாம் கூறப்பட்டிருக்கிறது.

### தேர்

பூமியாகிய தேரிற் கட்டப்பட்ட குதிரைகள் நான்கு. அவற்றின் நிறம் வெண்மை. இந்நான்கு குதிரைகளும் தோஷமில்லாத நான்கு வேதங்களைக் குறிக்கின்றன. வேதம் என்னும் பதம் வித் என்ற தாதுவின் அடியாகப் பிறந்த சொல். வேதங்கள் தர்மத்தைக் கூறுகின்றன வென்று தைத்திரியோபநிஷத் கூறுகிறது.

### சாரதி

இவ்வித இரதத்துக்குச் சாரதியாக அமைந்தவன் பிரமன். ஆண்டவன் வேதங்களைப் பிரமாவுக்குக் கற்றுக் கொடுத்தான். எதன் பொருட்டு? அவன் மூலமாக வேதங்கள் உலகில் பரவுதல் வேண்டும் என்று கருதியே. பிரமனுக்கு நான்கு முகங்கள். ஒவ்வொரு முகமும் ஒவ்வொரு திசையைப் பார்க்கின்றன. அதனால் தேருக்கு எவ்வித ஆபத்தும் உண்டாகாது. எனவே, பூமியாகிய இரதத்தை வேதமாகிய குதிரைகளைப் பூட்டி ஒழுங்காக நடத்துபவன் பிரமா.

### சக்கரங்கள்

இப்பூமியாகிய இரதத்துக்குச் சக்கரங்களாக அமைந்தவர் சூரிய சந்திரர். சூரிய சந்திரர் இவ்வுலக வளர்ச்சிக்கு

இன்றியமையாதவர். எனவே, இரதத்துக்கு முக்கியமான சக்கரங்களாக அவர்கள் அமைந்தார்கள். சூரியன் அசுத்தத்தைப் போக்குவது. இதை யொட்டியே இக்காலத்துக் கோவில்களில் சூரியன் முதல் சண்டேசுரர் ஈருக உள்ளவர்களுக்குப் பூசைகள் நடைபெறுகின்றன. கோவில்களில் முன் காலத்தில் நவக்கிரகங்கள் கிடையா. பைரவர் கோயில் காவலர், அவருக்குப் பக்கத்தில் இருப்பவர் சூரியர். அவர் இல்லாவிட்டால் சிவபூசை இல்லை. ஆன்மாவைச் சத்வ குணத்தில் புக வைப்பது சூரியன்; இன்பத்தை உண்டாக்குவது சந்திரன். சூரியன் முன் சூரியகாந்தக்கல் நெருப்பை உண்டாக்குகிறது. இது சிருஷ்டியைக் குறிப்பது. சூரியோதயத்தைக் கண்டு தாமரை மலர்கிறது. அது ரட்சையின் பாற்படும். நீரிலிருந்து தாமரைக் கொடியைப் பிடுங்கி எறிந்தால் அது தன்னை மலர்வித்த சூரியனலேயே எரிக்கப் படுகிறது. இது சம்ஹாரம். எனவே, சூரியனிடத்திலேயே சிருஷ்டி, ரட்சை, சம்ஹாரம் என்ற முக்குணங்களும் அடங்கியுள்ளன.

**வில்**

சிவபெருமான் கையில் வில்லைத் தாங்கியுள்ளார். காற் பெருவிரல் முதல் நெற்றிவரை உள்ளது வில். தனக்குக் குறைந்த மேருவைக் கடவுள் வில்லாகத் தாங்கியுள்ளார். மேருமலை பொன் வடிவாயுள்ளது. ஆண்டவன் அனல் வடிவினன். அனலின் முன் பொன் உருகுதல் இயற்கை. அதனல் வில் உருகுந்தன்மை யுடையது. மற்றவர்களைப் பாவத்துக்குள்ளாக்குதல் கூடாதென்றெண்ணியே ஆண்டவன் வில்லை ஏந்தியுள்ளான். அவ்வில்லுக்கு அம்பாக உள்ளவர் விஷ்ணு. அதன் நுனி அக்கினி தேவன். எதிரிகளை அக்கினி எரிக்கும். வில்லுக்கு நாணுக அமைந்தது ஆதிசேஷன். அவன் அறிவிற் சிறந்தவன். அறிவு இல்லாவிடின் எக்காரியமும் நடைபெருது. இந்த இரதத்தின் இறகுகளாக உள்ளவன் வாயு.

பொதுவாகச் சமுத்திரத்தின்மீது போகும்போதும், சண்டைக்குச் செல்லும் போதும், தனந்தேடப் போகும் போதும் மனைவியுடன் செல்லுதல் கூடாது. ஆனல் ஆண்டவன் யுத்தத்துக்குப் போகும்போது மனைவியை உடன்

அழைத்துச் செல்கிறான். பெண்மை இரக்கத்தைக் குறிப்பது. எனவே சக்தி உடன் செல்வது ஆண்டவன் இரக்க நெஞ்சை உடையவன் என்பதைக் காட்டுகிறது. இரதத்தில் இளங் குழந்தையும் உடன் செல்கிறது.

## முப்புரமெரித்தல்

இவ்வாறு இரதத்தில் எதற்காகச் செல்கிறார்? முப்புரத்தை எரிப்பதற்காக. மனிதருக்கு மூன்று சரீரங்கள் உண்டு. அவை ஸ்தூலம், சூக்குமம், காரணம் எனப்படும். அம்மூன்று உடலங்களுக்கும் காரணமா யிருப்பவை மூன்று மலங்கள். அவைகளே ஆணவம், கன்மம், மாயை எனப்படும். இம்மூன்று மலங்களையும் அழிப்பதற்காகவே ஆண்டவன் மும்மல காரியத்தை மேற்கொண்டார். எனவே, 'முப்புரமாவது மும்மல காரியம்' என்று திருமந்திரம் கூறுகிறது. மும்மலங்களுக்கு மோகம் முதலிய பதின்மூன்று காரியங்கள் உண்டு. மலங்களில் மூன்று விதம் இருத்தல்போல் மனிதரிலும் மூன்று விதமானவரைக் காணலாம்.

கடவுளின்றி இவ்வுலகத்தில் நாம் எதையும் செய்தல் இயலாது. கண் மட்டும் ஒரு பொருளைக் காணமுடியாது. அக்கண்ணோடு உயிரும் சேர்ந்தாலேயே பொருள்களைக் காணுதல் கூடும். அதுபோலவே உயிரோடு ஆண்டவன் சேர்ந்தாலேயே உயிருக்கும் இயக்கும் சக்தி உண்டாகிறது. கடவுளிடத்து நாம் இடையறா அன்புடையவராய் இருத்தல் வேண்டும். இதுவே அயரா அன்பு என்று கூறப்படுகிறது. பராபக்தி என்பது மேலான பக்தியாகும். இரதோத்ஸவத்தில் பராபக்தி மார்க்கமும் உண்டு. கெட்ட பக்தியும் உண்டு. பராபக்தியால் நல்ல நிலையைப் பெற்றவர் மூவர். அவரே சுதன்மன், சுசிலன், சுபுத்தி என்போர். அவர்கள் முறையே தர்மம், ஆசாரம், அறிவு என்ற மூன்றையும் குறிப்பவர்கள். கெட்ட பக்தியால் இறந்தவர் மூவர். அவர் தாரகாட்சன், வித்யுந்மாலி, கமலாட்சன் எனப்படுவோர்.

தேரூர்ந்த திரிபுராந்தகன், அக்கினி, பிரமா, வாயு முதலியவர்களைக் கொண்டு வெற்றிபெற்றால் அவர்களுக்குக் கர்வம் உண்டாகும் என்று எண்ணிப், புன் சிரிப்பாலேயே முப்புரங்களையும் எரித்தான்.

# முத்தித் தலைவர்*

காலம் - ஒரு தத்துவம். அது மாயையில் அசுத்த மாயையில் தோன்றுகிறது. தத்துவங்கள் மூவகை. அவை ஆத்தும தத்துவம், வித்யாதத்வம், சிவதத்துவம். அவை முறையே 24, 7, 5. இம்முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மக்களாகிய நாம் அடங்கிக் கிடக்கின்றோம். இவற்றைக் கடந்து நிற்பவன் கடவுள். இத்தத்துவங்கள் அறிவற்றன. நாம் அற்ப அறிவினையுடையோம். ஆதலின் இவற்றிற்குக் கட்டுப்பட்டு வாழ்கிறோம். இறைவன் காலகாலன். நாம் செய்யவேண்டுவது காலத்தையொட்டிக் காலத்தை வெல்வதே. இறைவன் தயவு இயையின் நாம் வெல்லுதல் கூடும்.

வால்மீகி தம் இராமாயணத்தில் பாலகாண்டத்தில் விசுவாமித்திரர் வாயிலாக "எவராயிருப்பினும் கார்த்திகேயனிடத்தில் பக்தி பண்ணுபவர் புதல்வர் முதலிய பல பேறுகளைப் பெறுவர்" என்று சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது.

பார் ; நின்றிடுவர் பார் ; பக்திதனில் நின்றிடுவர் பார் ; எப்படிப்பட்ட பக்தி ? மும்மலமும் மோசிக்கும் பக்தி. யார் நின்றிடுவர்? முத்தித்தலைவர். எனவே முத்தித் தலைவர் மும்மலமும் மோசிக்கும் பக்திதனில் நின்றிடுவர் பார். பக்தியால் இறைவன் தயவு இயைய முத்தி சித்திக்கும் என்பதையே இத்தொடர் விளக்குகிறது.

——

*1938-ல் திருமயிலை வெள்ளீசுரர் ஆலயத்தில் கந்தர் சஷ்டிச் சொற்பொழிவுகள் ஞானியாரடிகள் செய்தார்கள். அதுசமயம் எடுத்த குறிப்புகள்.

## நிருவாக சபைக் கூட்டம்

5. சமாஜ நிருவாக சபைக் கூட்டம் ஒன்று 15-12-57 ஞாயிறன்று காலை 9-30 மணிக்கு, 150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை என்ற இல்லத்தில் நடைபெறும். இவ்வாண்டு சமாஜ வரவு செலவுக் கணக்குகள் பரிசீலனை செய்யவும், மகாநாட்டு விஷயமாக ஆவன செய்யவும் அக்கூட்டத்தில் முடிவு செய்யப்பெறும். —காரியதரிசி

---

**திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி**

(மூலமும் உரையும்) 0 05

ஷை நூறு பிரதிகள் ரிஜிஸ்தர் தபாற்கூலியுள்பட 6 25

**குகார்ச்சனைத் திருமந்திரம்** 0 06

கிடைக்குமிடங்கள் :—

1. சைவ சித்தாந்த மகா சமாஜம்,
   14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4
2. ம. பாலசுப்பிரமணிய முதலியார்,
   150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1

—

## திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி

திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார் எழுதிய உரையும் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் எழுதிய அணிந்துரையும் கொண்டது. சமாஜப் பொன்விழா வெளியீடுகளுள் ஒன்ருகப் பதிப்பிக்கப்பெற்றது. 176 பக்கங் கொண்டது. விலை ரூபா ஒன்று, ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா ஒன்பது. தபாற்கூலி வேறு.

பாம்பன்-குமரகுருதாச சுவாமிகள் அருளிய நூல்கள்

**சிறுநூற்றிரட்டும்**

**குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதியும்** ரூ. 1

**நாலாயிரப்பிரபந்த விசாரம்** ரூ. 1

**ஸ்ரீ சுப்பிரமணியத்தைக் குறித்த வியாசம்** ரூ. 1½

**சேவியறிவுறூஉ** அ. 3

**சிவஞான தீபம்** அ. 8

கிடைக்கும் இடம்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1

# சைவ சித்தாந்த மகா சமாஜம்,

# பொன்விழா மலர்

மிக மிகக் கவர்ச்சியான வெளியீடு. இதில் ஐம்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. சமாஜத்தின் ஐம்பது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் தெளிவாக எழுதப் பெற்றுள்ளன. ஐம்பதாண்டுகளில் நடந்த நிறைவு விழாக்களின் தலைவர்கள் ; நடைபெற்ற இடங்கள்; மங்கையர் மாநாடு, இளைஞர் மாநாட்டு விவரங்கள் ; சமாஜத் தொண்டர்கள் தொண்ணூற்றொருவர் பற்றிய குறிப்புக்கள்; உயர் திருவாளர்கள்: ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள், ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை, ஸர். பொன்னம்பலம் இராமநாதன், பொன்விழாத் தலைவர் கனம் சு. நடேசப் பிள்ளை, திரு.வி.க. முதலிய முப்பதின்மர் உருவப்படங்கள் , வேறு பற்பல சிறப்புக்கள் இதில் மிளிர்கின்றன. கட்டுரையாளர்களுள் டாக்டர் அ.சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி, தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார் சித்தாந்த ரத்னாகரம் முத்து சு. மாணிக்கவாசக முதலியார் திரு. அ. மு. பரமசிவானந்தம் முதலியோர் உள்ளனர். இருநூற்று நாற்பது பக்கங் கொண்ட அழகிய பதிப்பு.

**விலை ரூபா ஒன்று.** ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பன்னிரண்டு. உடனே முன்பணம் அனுப்பிப் பெற்றுக் கொள்க. வி. பி. மூலம் அனுப்பப்படமாட்டாது.

மாநாட்டுப் பந்தரில் வாங்குவோருக்கு 75 நயா பைசா விலைக்குக் கிடைக்கும்.

கிடைக்கும் இடம் :

பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை–1.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V. K. Punithavathi Edited by C. M. Ramachandran Chettiar, B..A., B.L., and Published by S. Satchidanandam Pillai, B A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4